# முத்தரையச் சோழர் வரலாறு









சோழர் முத்தரையர் மரபினரே

# முத்தரையச் சோழர் வரலாறு
# மரபுப்பட்டியல்





நூல் ஆசிரியர் : **சி. சுந்தரராஜன் சேர்வை**

பதிப்பாசிரியர் : **கு.மா. சுப்பரமணியன்,** M.A., M.A., M.Phil.,
செல் : 94421 60046

*வெளியீடு :*
**பாக்கியா பதிப்பகம்**
227, பெரியார் நகர்,
இராசகோபாலபுரம் அஞ்சல்,
புதுக்கோட்டை மாவட்டம்,
அஞ்சலக எண் - 622 003.
செல் : 94421 60046

# முத்தரையச் சோழர் வரலாறு

நூல் ஆசிரியர்

**சி. சுந்தரராஜன் சேர்வை**

*வெளியீடு :*

**பாக்கியா பதிப்பகம்**

227, பெரியார் நகர்,

இராசகோபாலபுரம் அஞ்சல்,

புதுக்கோட்டை மாவட்டம்,

அஞ்சலக எண் - 622 003.

## பதிப்புத் தகவல் பட்டியல்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | **முத்தரையச் சோழர் வரலாறு** |
| நூல் ஆசிரியர் | : | **சி. சுந்தரராஜன் சேர்வை** |
| பதிப்பாசிரியர் | : | **கு.மா. சுப்பிரமணியன், M.A., M.A., M.Phil.,** |
| உரிமை | : | பதிப்பாசிரியருக்கு |
| புலம் | : | வரலாறு |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | 2007 |
| தாள் அளவு | : | 18.5 செ.மீ. X 12.5 செ.மீ. |
| எழுத்து அளவு | : | 12 |
| பக்கங்கள் | : | 64 |
| படிகள் | : | 1000 |
| நூலின் விலை | : | ரூ. **35/-** |
| அச்சிட்டோர் | : | ஸ்ரீ அம்மன் கம்ப்யூட்டர் பிரிண்டர்ஸ் புதுக்கோட்டை. |
| வெளியீடு எண். | : | 01 |
| வெளியீடு | : | **பாக்கியா பதிப்பகம்** 227, பெரியார் நகர், இராசகோபாலபுரம் அஞ்சல், புதுக்கோட்டை மாவட்டம், அஞ்சலக எண் - 622 003. |

# முன்னுரை

1977ல் நான் நூல் நிலையங்களில் தென்னிந்தியக் கோயில்களின் கல்வெட்டுக்கள் நூலினைப் படிக்கும் போது தஞ்சை நாயக்கர் வெளியிட்டு இருந்த ஒரு கல்வெட்டில் "வளைய சோழன் இருப்பு" என்று ஒரு ஊரினை குறித்திருப்பதை காணநேர்ந்தது. சோழர்களை இப்படியும் கல்வெட்டுகளில் நாயக்கர்கள் கூறி இருந்த செய்தி என்னை சோழர் வரலாற்றையும், அவர்களின் குடிவழியினரையும் ஆராயத் தூண்டியது. அதன் பயனாய் புதுக்கோட்டை மாவட்டம் திருவரங்குளம் செப்புப்பட்டயத்தில் "கரிகால் சோழன் குழுவினராகிய சூரிய குல முத்தரையர்" என்று குறிக்கப்பட்டிருப்பதை திரு. புதுகை இரா. திருமலை நம்பி மூலம் அறியவும் நேர்ந்தது. இவ்விரு தடயங்களின் பேரில் மேற்கொண்ட முயற்சியின் காரணமாக எனக்கு பல புதிய செய்திகளும், உண்மைகளும் தெரியவந்தன. தொடர்ந்து சோழர் வரலாற்றை படித்தும், கல்வெட்டு ஆவணங்களை ஆராய்ந்தும், செப்புப்பட்டயங்களைத் தேடி ஆராய்ந்தும் எனது முயற்சிகளை தொடர்ந்து செய்து வந்ததின் பேரில் சோழர்களின் வரலாற்றில் கி.பி. 530க்கு உரிய நந்திவர்ம சோழன் குடும்பத்தில் தொடங்கி கி.பி. 1535ல் தஞ்சை வீரசேகர சோழனிடமிருந்துநாயக்கர்கள் ஆட்சியைக் கைப்பற்றியது வரையில் உள்ள 1000 ஆண்டுகளுக்குரிய மரபுப்பட்டியலை தயாரிக்க முடிந்தது. ரே நாட்டுச் சோழர், பல்லவர்காலத்து முத்தரையச் சோழர், பிற்காலச் சோழர், கொங்கு சோழர், விஜய நகர அரசர்கள் காலத்துச் சோழர் என அப்பட்டியல் தொடர்ச்சியாக தயாரிக்கப்பெற்றது. அம்மரபுப்பட்டியலின் படி இந்நூலினை நான் எழுதியிருக்கிறேன். இதன் விரிவான நூல் அச்சில் உள்ளது. 1332 வது பேரரசர் சுவரன் மாறன் பெரும்பிடுகு முத்தரையர் பிறந்த நாள் விழா நடத்தப் பெறும் நாளில் அதே நூலை சற்று சுறுக்கி இந்நூல் தரப்பட்டுள்ளது.

இந்நூலின் கருத்துக்களை தமிழக வரலாற்று ஆசிரியர்கள் பலருடனும் கலந்து பேசி இருக்கிறேன். எவரும் இதற்கு மறுப்போ, மாற்றுக் கருத்தோ கூறியதில்லை. தேவையில்லாமல் முத்தரையச் சோழர் குடிவழியினரின் மரபு உண்மைகள் காலத்தின் செயலால் இருட்டடிப்பில் இதுகாறும் இருந்துள்ளது. அவ்விருளை ஓட்டி சோழரின் வரலாற்று ஒளி உமிழும் சூரியனாக இந்நூல் மக்கள் மத்தியில் வெளிவர உதவிய அறிஞர்களுக்கும், நண்பர்களுக்கும் எனது தாழ்மையான வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை குறுகிய காலத்தில் அச்சிட்டு வெளியிட முன்வந்த எனது அன்பு சகோதரர் திரு. கு.மா. சுப்பரமணியன் அவர்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். அவர்களுக்கு எனது நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.



அன்புடன்
**சி. சுந்தரராஜன் சேர்வை**
தஞ்சை.

# மதிப்புரை

வரலாற்றுவித்தகர்
பேராசிரியர் திரு. **ம. ராஜசேகர தங்கமணி** M.A., M.Phil.,
பாண்டியன் நகர்,
கரூர்.

முத்தரையச் சோழர் வரலாறு என்னும் தலைப்பில் திரு. மன்னை, சி. சுந்தரராஜன் சேர்வை எழுதியுள்ள இந்த ஆராய்ச்சி நூல் மிகவும் நீண்ட கடின உழைப்பின் பேரில் எழுதப்பட்ட நூல் ஆகும். இதில் இணைக்கப்பட்டுள்ள மரபுப் பட்டியல்கள் 1000 ஆண்டு காலத்திற்கு உரியதாக உள்ளன. கால முரண்பாடு இன்றியும், சரியான கால அளவுகளை உடையதாகவும் அப்பட்டியல்கள் உள்ளன. நீண்ட காலமாக, 10, 12 ஆண்டுகளுக்கு மேல் இவர் இத்தலைப்பில் ஆய்வுகள் செய்து வந்தது எனக்குத் தெரியும். அவ்வப்போது என்னுடன் விவாதமும், உரையாடலும் இது குறித்து செய்தும் இருக்கிறார்.

முத்தரையர் ரே நாட்டு நந்திவர்ம சோழன் குடும்பத்தினர் என்பதையும், விஜயாலய சோழன் வழியினரும் அதே குடும்பத்தின் வழிவந்தவர் என்பதையும் நூலாசிரியர் தக்க ஆதாரங்களுடன் நிருபித்துள்ளார். அதற்குரிய ஒரு குறும் பட்டியலையும் கொடுத்திருப்பது மிக நன்றாக உள்ளது. இவர் கொடுத்திருக்கும் இம்மரபுப்பட்டியல்களை சாராது வேறு எந்த வகையிலும் சோழ முத்தரையர்களின் வரலாற்றை முறையாகத் தரவே முடியாது என்பதை நான் ஆணித்தரமாக அறுதியிட்டுக் கூறிக் கொள்கிறேன். சோழர் வரலாற்றில் ஒரு பெரிய திருப்பத்தை தருவதாக

அமைந்துள்ளது இந்நூல். சோழர் வரலாற்றில் இவர் கூறியுள்ள புதிய செய்திகள், புதிய கருத்துக்கள் ஒரு புதிய ஒளியைப் பாய்ச்சிக் கொண்டிருக்கின்றன. தொடர்ந்து சோழர் வரலாற்றை ஆய்வு செய்யும் அறிஞர்களுக்கு இவை பேருதவியாக இருக்கும் என்பதை உறுதியாகக் கூறுகிறேன்.

மிகக் கடுமையான உழைப்பின் பேரில் வரலாற்று நூல் வரிசையில் சாதனைபுரிந்துள்ள இவர், மேலும் பல ஆய்வு நூல்களைத் தரவேண்டும் என்று நான் கேட்டுக் கொள்கிறேன். எனது மனப்பூர்வமான பாராட்டுக்களும் வாழ்த்துக்களும். இந்நூலை வெளியிடும் பதிப்பகத்தாருக்கும் எனது பாராட்டுக்கள் அதற்குரிய முழு பெருமையும் திரு. கு.மா. சுப்பரமணியன் அவர்களையேச்சாறும் முயற்சி வெற்றிபெற என் மனப்பூர்வமான வாழ்த்துக்கள்.

*அன்புடன்*

பேராசிரியர்

**திரு. ம. ராஜசேகர தங்கமணி M.A., M.Phil.,**

**பாண்டியன் நகர், கரூர்.**

# பதிப்புரை

தமிழகத்தில் களப்பிறரை வென்று தமிழர் ஆட்சியை நிறுவிய நந்திவர்ம சோழன் முதல் (கி.பி. 500 முதல் கி.பி. 1535) வீரசேகரச் சோழன் வரை உள்ள சுமார் 1000 ஆண்டுகளுக்குரிய மரபுப்பட்டியலை முத்தரையச் சோழர் என்ற இந்நூலில் அறிய முடிகிறது. நூலாசிரியர் மன்னர்களின் மரபு வழியை பட்டியலில் தெளிவாக்கி இருப்பது ஆய்வின் நுண்ணறிவை மெய்ப்பிக்கிறது.

தமிழ்நாட்டின் வரலாற்றை வரலாற்று அறிஞர்கள் சேர, சோழ. பாண்டியர், பல்லவர் வரலாற்றை ஆய்வு செய்து, எழுதியளவுக்கு ஏனோ முத்தரையர் வரலாற்றை ஆய்வு செய்து எழுத முயற்சி செய்யவில்லை என்ற குறையை மன்னை சி. சுந்தரராசன் அவர்கள் நிவர்த்தி செய்து உள்ளார். இவர் ஊரக வளர்ச்சித்துறையில் துணை வாட்டார வளர்ச்சி அலுவலராகப் பணிபுரிந்து ஓய்வு பெற்றவர். தஞ்சை சரஸ்வதி மகால் நூலகம், தமிழ்ப்பல்கலைக்கழக நூலகத்தில் அதிக நூல்களைக் கற்றவர்.

இவர் தன்னுடைய ஆய்வுக்கு செப்பேடுகள், கல்வெட்டுக்கள், தல வரலாறு நூல்கள், சங்க இலக்கியங்கள், காப்பியங்கள், நீதி நூல்கள், பக்தி இலக்கியங்கள், வரலாற்று நூல்கள், புராணங்கள் முதலிய நூல்களில் உள்ள செய்திகளை நன்கு கற்று, ஆய்ந்து முத்தரையச் சோழர் என்ற தலைப்பில் இந்நூலை உருவாக்கியுள்ளார். நூலாசிரியர் தன்னுடைய ஆய்வின் மூலம் முத்தரையர் மரபு வழித்தோன்றல்களே சோழ மன்னர்கள் என்பதை சான்றுகளுடன் உறுதி செய்கிறார். மேலும் ஆசிரியர் இந்நூலை தம் அரிய, பெரிய ஆய்வுடன் விவரித்து எழுதி மரபுப்பட்டியலுடன் வெளியிட்டுள்ளார். வரவேற்கிறோம்! வாழ்த்துகிறோம் !!

**பாக்கியா பதிப்பகம்,**

227, பெரியார் நகர், இராசகோபாலபுரம்,

புதுக்கோட்டை - 3.

# முத்தரையச் சோழர் வரலாறு

முத்தரையர் என்கிற வழங்கு பெயர் தொன்மையான அரையர் குலத்தவர் என்கிற பொருளை வழங்கி நிற்கிறது. அப்படி எனில் அவர் எந்த அரசமரபில் தொன்மையானவர் என்று அது குறிப்பிடுகிறது என்பதே நமது ஆய்வு. முத்தரையரைப் போன்று பாண்டியர் என்கிற சொல்லும் பண்டைய அரையர் என்றும், பண்டைய அரச குலத்தவர் என்றும் கூறிநிற்கிறது. அவர்களையும் எந்த குடிவழியில் வந்தவர் என்றும் ஆராயவேண்டியுள்ளது. பாண்டியர் மீனவர் குடிவழியில் வந்தவர் என்று மிக எளிதாகக் கூறிவிடமுடியும். அதற்கு ஆதாரம் நிறைய உள்ளன. ஒரு புலவர் தென்திசையில் இருந்த பாண்டியரைக் குறிக்கவும், வடதிசையில் இருந்த கன்னட மற்றும் ஆந்திரர்களைக் குறிக்கவும் கீழ்க்கண்டவாறு கூறியுள்ளதை பார்க்கலாம்.

"தென்பரதவர் மிடல் சாய
வடவடுகர் வாளோட்டிய" என்றுக் குறிப்பிடுகிறார்.

சோழன் இளஞ்சேட்சென்னி பாண்டியரையும், வடுகரையும் வென்றதையே இவ்வாறு குறிப்பிடுகிறார். எனவே பாண்டியர் பரதவ குலத்தவர் என்றும், மீன் கொடி அவர்களுகடையது என்றும் கூறிவிடலாம். ஆனால் சோழ நாட்டை ஆண்டுவந்த முத்தரையர் எக்குடியினர் என்பதை சற்று ஆழ்ந்து ஆராய்ந்துதான் கூறமுடியும்.

கன்னட நாட்டின் மலைப்பகுதியில் வாழ்ந்த ஒரு வகை மக்கள் சேர, சோழ, பாண்டிய நாட்டை கி.பி. 275 வாக்கில் கவர்ந்து ஆளத்தலைப் பட்டபோது, சோழநாட்டில் சோழர் அரசிழந்தனர். பாண்டியர் இலங்கைக்குள் சென்று மறைந்து வாழ்ந்தனர். சேரரும் மலைக்காடுகளில் சென்று மறைந்து வாழ்ந்தனர். இந்த நிலை

கி.பி. 530 வரை நீடித்தது. கன்னட நாட்டாரின் ஆட்சி தமிழகத்தில் நடந்த போது, திருப்பதிக்கு வடக்கே இருந்த சோழர்கள் மட்டும் எஞ்சி இருந்து அப்பகுதிகளில் தொடர்ந்து அரசர்களாய் இருந்து வந்தனர். கரிகால் சோழன் காலம் முதலே வடக்கே கிருஷ்ணா ஆறு வரையுள்ள நாட்டை சோழர்கள் ஆண்டு வந்துள்ளனர். அவர்கள் ஆண்ட அந்த பகுதியை சூளியநாடு (சோழ நாடு) என்றும் அரையர் நாடு என்றும் வரலாற்றில் அழைக்கப்பெற்றுள்ளனர். காஞ்சீபுரத்திற்கு தெற்கே உள்ள பகுதியை மட்டுமே கன்னட நாட்டுக் கலகக்காரர்கள் பிடித்து ஆண்டனர். காஞ்சிபுரத்திற்கு வடக்கே உள்ள பகுதியை கரிகால் சோழன் வழிவந்தவர் என்று தங்களைக் கூறிக்கொண்ட அரையர் நாட்டு சோழர்கள் கன்னடரின் இடையீட்டுக் காலத்திலும் தொடர்ந்து ஆண்டு வந்தனர். இவர்களின் அனேகக் கல்வெட்டுக்களில் தங்களை "முத்துராஜா" என்று குறிப்பிட்டதோடு சோழர்கள் என்றும் குறிப்பிட்டுள்ளனர். "அரையர் நாடு" என்று அவர்கள் குறிப்பிட்ட நாடு கடப்பை, கர்நூல், நெல்லூர், சித்தூர், புத்தூர், பெல்லாரி, அனந்தப்பூர் ஆகிய மாவட்டங்களை உள்ளடக்கி இருந்தது. பிற்காலத்தில் ஆந்திர மாநிலம் முழுவதும் அவர்கள் பரவி அரசர்களாக இருந்துள்ளனர். வட கன்னட மாவட்டத்திலும் அவர்கள் பரவியிருந்தனர்.

ரேநாட்டுச் சோழர்கள் தங்களைக் குறிப்பிடும்போது தாங்கள் காவிரிக் கரையிலிருக்கும் உறையூரிலிருந்து வந்தவர் என்றும், காவிரிக்கு கரைகட்டிய கரிகால் சோழன் வழிவந்தவர் என்றும், மந்தார மரம் என்கிற ஆத்திமரத்திற்கு உரியவர் என்றும், சூரிய குலத்தினர் என்றும் விடாது பல செப்பு பட்டயங்களில் கூறி வந்துள்ளனர். சில பட்டயங்களில் ராமன் காலம் முதல் அரசாண்ட சூரியன் என்பவர் முதற்கொண்ட முழுபட்டியலையும் கூறி நிற்கின்றன. அரையர் நாட்டுச் சோழர்கள்

என்கிற இவர்களை சற்று திரிந்த நிலையில் ரே நாட்டுச் சோழர்கள் என்று வரலாற்றாசிரியர்கள் கூறுவார்கள். இந்த ரேநாட்டுச் சோழர்கள் அப்பகுதியியைச் சுற்றி இருந்த எல்லா அரசமரபாருடனும் மணவுறவில் இருந்துள்ளனர். கங்கர்கள், மேலைச்சாளுக்கியர், கீழைச்சாளுக்கியர், கடம்பர்கள், பல்லவர் என அப்பட்டியல் நீளும், ஆனால் பல்லவரோடு அவர்களுக்கு இருந்த உறவு கொஞ்சம் அதிகம் எனலாம்.

**நந்திவர்மசோழன் :**

ஒரு கட்டத்தில் நந்திவர்ம சோழன் என்கிற ரே நாட்டுச் சோழன் (முதல் நந்திவர்ம பல்லவன் காலத்தவன்) தம்பிள்ளைகள் மூவர் உதவியுடன் தொண்டை நாட்டையும், சோழ நாட்டையும் கன்னடக்கலகக் காரர்களிடமிருந்து மீட்டு சோழர்களின் பழம் பெருமையை நிலைநாட்டினான். தொண்டை நாட்டையும், சோழநாட்டையும் தன் மூத்த மகன் சிம்ம விஷ்ணு சோழன் என்கிற கோசெங்கணனை ஆள அனுமதித்தான். இரண்டாவது மகன் சுந்தர நந்தனும், மூன்றாவது மகன் தனஞ்ஜெயவர்மனும் ரே நாட்டை கீழ், மேல் பகுதியாக பிரித்து ஆட்சிசெய்ய அனுமதித்தான்.

காஞ்சிபுரம், வல்லம், தஞ்சை, உறையூர் பகுதியில் அரச இருக்கைகளை அமைத்து சோழன் செங்கணன் என்கிற சிம்ம விஷ்ணு சோழன் சிறப்பாக ஆட்சிசெய்தான். இவனது ஆட்சி தெற்கே இரா்மநாதபுரத்தின் தென்பகுதியில் உள்ள செம்பி நாடு வரை (செம்பியன்நாடு) பரவி இருந்தது. இவனது மதுரை படையெடுப்பை கடைசி கன்னடநாட்டு அரசன் தமிழ்புலவர்களைத் தூது விட்டு தடுத்து விட்டான். புலவர்களின் கோரிக்கையை ஏற்று மதுரை மீது செங்கணன் படை நடத்தவில்லை. ஆயினும் சோழ மண்டலத்தில் தோற்ற கன்னடர் பெருங்கூட்டமாக வந்து

கொங்குநாட்டில் எதிர்த்தனர். அதில் செங்கணன் வென்றான். கன்னடரோடு வந்த கணயன் செங்கணனிடம் சிறைபட்டான். சோழ நாட்டு குடவாயிலில் கணையன் சிறை வைக்கப்பட்டான். அவனை சிறை மீட்க களவழி நாற்பது என்ற நூலை பொய்கையார் என்னும் அக்காலத்து ஒரு புலவர் செங்கணன் மீது பாடினார்.

கன்னடர் காலத்து பின்னடவில் இருந்த சோழ நாட்டில் 100 கோயில்களைக் கட்ட செங்கணன் ஆணையிட்டான். ஆனால் இதில் 78 கோயில்கள் மட்டுமே கட்டி முடிக்கப்பட்டது. இச்சூழலில் வடக்கே இருந்த இரு தம்பிமார்களின் நாடும் பல்லவர் வசமாகிவிட்டது. சிம்ம விஷ்ணு பல்லவன் என்கிற யுவராஜன் சோழ நாட்டின் மீது படையெடுத்து முதலில் காஞ்சியையும், பின்னர் தஞ்சை வல்லத்தையும் கைப்பற்றினான். இப்போது வயோதிக நிலையில் உறையூர் பாசறையில் செங்கணன் இருந்தான். அவன் மகன் நல்லடி யுவராஜனாக இருந்தான். போர் முனையில் தோற்ற நல்லடியையும், ரேநாட்டு இளவரசனையும் படையுடன் சென்று அவன் தந்தையின் கட்டுப்பாட்டில் இருந்த உறையூரை மீட்கும்படி பல்லவன் பணித்தான். செங்கணனும் மக்கள் மீது போரிட புறப்பட்டான். இந்நிலையில் புலவர் தடுத்தனர். தமிழ்புலவர்கள் மீது இருந்த பற்றால் அவர் சொல்படி சோழன்பாறையில் உண்ணா நோன்பிருந்து புகமுடம்பினை செங்கணன் அடைந்தான். அவனது ஆட்சி எல்லையை கவனத்தில் கொண்டு அவனை கோப்பெருஞ்சோழன் என்பர் புலவர்கள்.

**பள்ளங்கோயில் செப்பேடு :**

இச்செப்பேடு சிம்ம விஷ்ணு சோழனிடமிருந்து சிம்ம விஷ்ணு பல்லவன் சோழநாட்டை பிடித்தான் என்று கூறுவதிலிருந்து இந்த அரசியல் நிகழ்ச்சியை தெளிவாக புரிந்து கொள்ளலாம். காஞ்சியை வென்ற பல்லவன், தொடர்ந்து வந்து வல்லத்தை

முற்றுகை இட்டான். அப்போது புலவர் ஒருவர் இதை தனது அகம் 336ம் பாடலில் குறிப்பிடுகிறார். பாவைக் கொட்டிலார் என்னும் அப்புலவர்,

நல்லடியின் வல்லத்தை சூழ்ந்திருந்த ஆரியப்படை முற்றுகை உடைந்ததைப் போல இப்பெண்ணின் கைவளையல்கள் நொருங்கி உடைவதாகுக என்னும் பொருளில் பாடியுள்ளார்.

இதன்மூலம் பல்லவர் ஆரிய வம்சாவழியினர் என்று புலவர் கூறியுள்ளதை உறுதிசெய்து பல்லவர்கள் வெளியிட்ட செப்புப் பட்டயங்களில், தங்கள் துரோனாச்சாரியார் என்கிற ஆரியரின் வழிவந்தவர் என்று கூறியுள்ள மையோடு நன்கு ஒத்துபோவதையும் காணலாம். இப்படையெடுப்பின் கால கி.பி. 575 ஆகும்.

இதன் பிறகே கடுங்கோன் பாண்டியன் மதுரையில் இருந்த கன்னட நாட்டவரை நீக்கிவிட்டு ஆட்சிக்கு வந்தான். இவனைத் தொடர்ந்து வந்த மூன்று பாண்டியர்களின் கல்வெட்டுக்கள் செம்பிநாடு முதலான பகுதிகளில் காணப்படாததற்குக் காரணம் அப்பகுதி சோழர் வசமே இருந்ததே ஆகும்.

சோழ நாட்டில் சிம்ம விஷ்ணு சோழனின் ஆட்சி கி.பி. 530 முதல் 575 வரை 45 ஆண்டுகள் சுய ஆட்சியாக இருந்துள்ளது. சிம்ம விஷ்ணு சோழனின் மகன் நல்லடியின் காலம் முதல் சிம்மவிஷ்ணு பல்லவனுக்கு கட்டுப்பட்ட ஆட்சியாக மாறி போனது. இந்த நிலை பல நூற்றாண்டுகள் தொடர்ந்தது.

நல்லடி சோழனுக்குப் பிள்ளைப் பேரு இல்லை. எனவே நல்லடியின் இளைய சிற்றப்பன் தனஞ்செயவர்மனின் பெயரன் குணமுதிதன் சோழநாட்டு அரசனாக ஆகி, ஆளவந்த சோழனாக சோழநாட்டை ஆண்டுவந்தான். குணமுதிதன் தம்பி புண்ணிய

குமாரன் வடக்கே மேல்பாதி ரே நாட்டின் அரசனாக இருந்தான். சுந்தரநந்தன் வழிவந்தோர் ரே நாட்டின் கீழ்பகுதி நாட்டின் அரசனாக இருந்து வந்தனர். இக்கீழ்ப்பகுதி ரே நாடு திருவொற்றியூர் வரை பரவி இருந்தது.

**சாளுக்கியர் படையெடுப்பு :**

இந்த நிலையில் பல்லவர்களின் கீழ் இருந்த ரே நாட்டை (அரையர் நாடு) சாளுக்கியர் கைப்பற்றிவிட்டனர். எனவே, கீழ்பகுதி ரே நாட்டின் சுந்தரநந்தன் வழியினர் கீழை சாளுக்கியர் கீழும், மேல் பகுதி ரே நாட்டின் தனஞ்செயவர்மனின் வழிவந்த புண்ணிய குமாரன் வழியினர் மேலை சாளுக்கியர் கீழும் இருந்து அரசாள வேண்டிய புதிய நிலை ஏற்பட்டது. தமிழக சோழர் பல்லவர் கீழ் தொடர்ந்து இருந்துவந்தனர். பல்லவர்கள் வடக்கே சாளுக்கியருடன் சண்டைபோட்டு காஞ்சியைக் காத்துக்கொள்ள வேண்டிய நிலைமைக்கு ஆளாயினர். மேற்கே கங்கர்களும் பல்லவர்களுடன் அனேக போர்களை நடத்தினர். இந்த நிலையில் சோழ நாட்டில் இருந்த சோழர்கள் முத்தரையர்கள் (முதிராஜ்) என்கிற பெயரில் சாசனங்களை வெளியிட்டுள்ளனர். தங்களின் சோழர் குடியை நன்கு விளக்கிக் கூறவே முத்தரையர் என்று கூறிக் கொள்ள தலைப்பட்டுள்ளனர். நாம் முன்பு குறிப்பிட்டது போல் முத்தரையுர் என்பது பழமையான சோழர் குடிவழிவந்த முத்தரையர் என்று கூறும் முகத்தானாகவே முத்தரையர் என்றுக் கூறிக்கொண்டுள்ளனர். தொன்மையான சோழர்குடி வழியினர் என்பதே இம்முத்தரையர் என்பதன் பொருள் ஆகும்.

1. செங்கணன் என்கிற சிம்ம விஷ்ணு சோழன் ஆட்சி, சுயாட்சியுடையது
2. நல்லடி காலத்து அரசன் : சிம்ம விஷ்ணு பல்லவன்
3. குணமுதிதன் காலத்து அரசன் : மகேந்திர பல்லவன்
4. குவாவன் மாறன் காலத்து அரசன் : நரசிம்ம பல்லவன், கூன்பாண்டியன்

குவாவன் மாறன் காலம் முதல் உள்ள முத்தரையர்களின் வரலாறு தமிழகத்தில் தெளிவாக நமக்குக் கிடைக்கிறது. ஆனால் அவன் தந்தை குணமுதிதனின் காலத்து வரலாற்றில் விளக்கப்பட வேண்டிய பகுதிகள் உள்ளன. குணமுதிதனின் பெயர் புண்ணிய குமாரனின் செப்பேட்டில் காணப்படுகிறது. குணமுதிதன் என்றால் குணத்தை விரும்புகிறவன் என்று பொருள். இவனது இன்னுமொரு பெயர் இதே பொருளில் காணப்படுவது குணசேனன் என்பதாகும். குணசேனன் என்பவனே திருநல்ல குன்றத்து குடைவரைக் கோயில், திருமெய்யம் குடைவரைக்கோயில், திருகோகர்ணம் குடைவரைக்கோயில், மலையக்கோயில் குடைவரைக்கோயில் ஆகியவைகளைக் குடைவித்தவன். அத்துடன் திருமெய்யம், திருநல்லக்குன்றம் ஆகியவைகளில் துவாரகபாலகர்களாக இவனையும், இவன் தம்பி புண்ணியக் குமாரனையும் செதுக்கி வைத்துள்ளான். இவன் காலத்து மகேந்திரவர்மனைப் போல இவனும் இசைப்பிரியனாகவும் இருந்துள்ளான். இதனால் இவன் கற்ற இசை நுணுக்கங்களை இசை கல்வெட்டுகளாக இவன் ஏற்படுத்தியுள்ள நான்கு குடைவரைக் கோயில் உள்ளும், புறமும் எழுதி வைத்துள்ளான். ஆனால் இந்த நிலை மகேந்திரனின் குடைவரைகளில் கிடையாது.

குணமுதிதன், குணசேனன் என்பதோடு இவனுக்கு குவாவன் என்கிற பெயரும் இருந்துள்ளதை அறியலாம். குவாவன் என்றால் நல்லவன் என்று பொருள். எனவே, இவன் ஏற்படுத்திய குடைவரைக் கோயில் அமைந்திருந்த குன்றத்திற்கு நல்லக்குன்றம் என்று பெயர் வழங்கப்பட்டுள்ளது. குவாவன்மாறன் என்று இவன் பெயரை முன்வைத்து இவன் மகன் பெயர் வழங்கப்பட்டுள்ளது. பிற்காலத்தில் புகழ்ச்சோழர் என்றும், 63ரில் ஒருவர் என்றும் ஆனபோது குவாவனுக்காக விருத்தாசலம் நல்லூர், புதுக்கோட்டை

புல்வயல் ஆகிய பகுதிகளில் நல்ல நாயனார் என்ற பெயரில் திருக்கோயில்கள் எடுக்கப்பட்டன. அக்கோயில்கள் பிற்காலத்தில் புஷ்பவனேஸ்வரர் கோயில் என்று மாறியுள்ளன.

புகழ்ச்சோழர் ஆன குவாவன் கரூரில் தீயில் இறங்கிய போது இவன் மகன் குவாவன் மாறன் இளைய பருவத்தினன், குவாவன் மாறனின் தமக்கையே மங்கையர்க் கரசியார். குவாவன்மாறன் காலத்தில் மாறவர்மன் அரிகேசரி என்கிற கூன்பாண்டியன் சோழ நாட்டைக் கவர்ந்தான். மங்கையர்க் கரசியையும் மணந்தான். குவாவன்மாறன் நல் உருத்திரன் என்கிற பெயரில் பாண்டியனைப் புகழ்ந்து முல்லைக் கலியைப்பாடினான். நார்த்தாமலை ஜைனக்குடைவரையை குவாவன்மாறன் ஏற்படுத்தினான். அவனது பிரதி பெயராகிய நல்உருத்திரன் மலை என்று அக்கோயில் அமைந்திருந்த மலை வழங்கியது. அது திரிபு பெற்று நாருத்தாமலை என்று தற்போது வழங்கிவருகிறது. நல்ருத்திரன்மலை - நல்ருத்தாமலை - நாருத்தாமலை என்பது அதன் திரிபு படி ஆகி உள்ளது.

**சோழர் முத்தரையரே :**

இவ்வாறாக ரே நாட்டில் தங்கியிருந்த கரிகால் சோழன் வழிவந்த சோழர் குடியினராகிய நந்திவர்ம சோழனின் வழிவந்தவரே சோழ நாட்டை ஆண்டுவந்த முத்தரையர் குடியினர் என்பது தெளிந்த நீரோடை போல் காணக்கிடைக்கிறது.

இவ்வுண்மைகளை தெரிய வொட்டாமல் போனதற்குக் காரணம் கீழ்க்கண்டவாறு இவர்களின் காலத்தை ஒழுங்கு படுத்தாததே ஆகும்.

கோச்செங்கணன் என்கிற சிம்ம விஷ்ணு சோழன்-530- 575 கி.பி.
நல்லடி என்கிற பீமச்சோழன் - 575 - 610 கி.பி.
குவாவன் என்கிற புகழ்ச்சோழர் - 610 - 649 கி.பி.
குவாவன்மாறன் என்கிற நல்லுருத்திரன் சோழன் -649 - 680 கி.பி.

ரே நாட்டில் குவாவனின் தம்பி புண்ணிய குமாரன் வழிவந்தோர் தொடர்ந்து ரே நாட்டுச் சோழர்கள் என்கிற பெயரில் ஆண்டு வந்தனர். அவர்களின் குடிமரபு மக்கள் இன்றைய நாளில் முதிராஜ், முத்துராஜ் என்கிற பெயரில் அங்கே வாழ்ந்து வருகின்றனர்.

**விஜயாலயச்சோழன் :**

கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் மத்தியில் விஜயாலயன் என்கிற ஒரு சோழன் தஞ்சையை முத்தரையச் சோழரிடமிருந்து கைப்பற்றினான். அவன் சந்ததியினர் பெரிய அளவில் ஆட்சிபெற்று விளங்கினர். இந்த விஜயாலயனும் முன்னர்க் கூறிய நந்திவர்மச்சோழன் குடும்பத்தைச் சேர்ந்தவனே, இவனைப்பற்றியும் சரியாக விளக்கப்படாததால் சோழருக்குப் பகையாக சோழர்களையே சித்தரித்து வரலாற்று ஆசிரியர்கள் எழுதி வருகிறார்கள். அதற்கு துணையாக முத்தரையர் என்கிற பெயர் அமைப்பும் பேதப்படுத்த உதவியாக இருந்து வந்துள்ளது. இதை ஒரு பூட்டகமாக வைத்துக் கொண்டும், விஜயாலயனுக்கும் ரே நாட்டு முத்தரையச் சோழர்களுக்கும் உரிய தொடர்புகளை சரியாக விளக்கிக் கூறாமலும் காலம் கடத்தப்பட்டு வந்ததால் சோழர்குடி வழியினருக்குத்தான் கவலை, பின்னடைவு எல்லாம். நாம் விஜயாலயனின் முன்னோர் குறித்து தீவிரமாக ஆராய்வோம்.




(1) E.P. Ind. Vol. XI Melapadu Plates
(2) சென்னை மியூசியம் ஸ்ரீ காந்தன் செப்பேடுகள்
(3) செந்தலை கல்வெட்டுகள்
(4) வேலஞ்சேரி செப்பேடுகள்
(5) அன்பில் செப்பேடுகள்

**செந்தலைக் கல்வெட்டு**

(குண) முதித பெரும்பிடுகு முத்தரை (3)
ய னா யி ன குவாவன் மாறனவ
ன் மகன் இளங்கோவதி யரைய
னாயின மாறன் பரமேஸ்வரன
வன் மகன் பெரும்பிடுகு முத்த
ரைய னாயின சுவரன் மாறனவ
னெடுப்பித்த பிடாரி கோயில். அவன்
எறிந்த ஊர்களும் அவன்போர்க
ளும் அவனைப் பாடினோர் பேர்களும் இ
த்தூண் கண் மெலெழுதினவை

பழையாரைப் பகுதியில் ஒரு சிறிய பகுதியில் அரசனாக இருந்த விஜயாலயன் தஞ்சையை முத்தரையர்களிடமிருந்து கைப்பற்றினான் என்கிறது வரலாறு. யார் இந்த விஜயாலயன் ? இவன் தந்தை பெயர் என்ன ? பாட்டன் பெயர் என்ன ? இவன் எப்படி திடும் என்று பழையாறைக்கு வந்தான் ? என்ன அரசியல் காரணத்திற்காக தஞ்சையைக் கைப்பற்றினான் ? இவன் தாய் யார்? இவன் தாய் வழிப் பாட்டன் யார் ? இவன் தந்தை ஆண்ட நாடு எது? இவன் தந்தை எப்போது எங்கே மறைந்தான் ? அவன் தந்தைக்கு பள்ளிப்படைக்கோயில் உள்ளனவா ? என்கிற கேள்விகளுக்கு விடைகண்டால் விஜயாலயனின் முன்னோர் எவர் என்பதற்குரிய முழு விபரமும் நமக்கு கிடைத்துவிடும்.

**வேலஞ்சேரி பட்டயம் :**

விஜயாலயனைக் குறித்து வேலஞ்சேரி பட்டயம் என்கிற விஜயாலயனின் பெயரன் முதல் பராந்தகன் செப்பேடு கூறுகிறது,

ஒற்றியூரன் என்பவனே விஜயாலயனின் தந்தை. இந்த ஒற்றியூர் என்பது சென்னையின் ஒரு பகுதியாகிய திருவொற்றியூர் ஆகும். இந்த ஒற்றியூரனை சுந்தரச்சோழன் வெளியிட்ட அன்பில் சாசனம் ஸ்ரீ காந்தன் என்று பெயர் கூறி அழைக்கிறது. இதனால் விஜயாலயனின் தந்தை ஸ்ரீ காந்தன் என்றும், இவனது நாட்டின் இருப்பிடம் ஒற்றியூரைத் தலைமையிடமாகக் கொண்டிருந்த நாடு என்றும் தெளிவடைகிறது. 80 கிலோ மீட்டர் தூரத்துக்கு அப்பால் காஞ்சியில் பல்லவர் இருக்கை இருந்தபோது, ஒற்றியூரில் இச்சோழனின் இருக்கை இருந்துள்ளது. இப்பகுதி கீழ் ரே நாட்டுப் பகுதியின் தென் கிழக்கு முனை ஆகும்.

ஸ்ரீ காந்தன் கீழைசாளுக்கியரின் கீழிருந்து அரசு புரிந்து வந்தவனா? என்று நாம் வினவும் போது, சென்னை அருங்காட்சியகத்தின் செப்புப் பட்டயமாகிய, ஸ்ரீ காந்தனின் முன்னோர் வம்சா வழிபட்டியல் அடங்கிய கீழைசாளுக்கியரின் செப்பேடுகள் நமக்குக் கிடைக்கிறது. அச்செப்பேடுகளில் உள்ள சோழ அரசர்களின் பெயர் பட்டியலில் முதலில் சுந்தரநந்தன் பெயரும், இறுதியில் ஸ்ரீ காந்தன் பெயரும் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனால் நாம் முன்னர் கூறிய தனஞ்ஜெயவர்மனின் அண்ணன் சுந்தரநந்தன் வழிவந்தவனே இந்த ஸ்ரீகாந்தன் என்பது தெளிவாகிறது. தனஞ்ஜெயவர்மனின் வழிவந்த புண்ணிய குமாரன் ரே நாட்டு மேல் பாதியை ஆண்டுவந்த போது, சுந்தரநந்தனின் சந்ததியினர் ரே நாட்டின் கீழ்ப்பகுதியை ஆண்டு வந்துள்ளனர் என்பதும் இதனால் பெறப்படும். புண்ணிய குமாரனின் அண்ணன் குணமுதிதனின் வழிவந்தோர் தஞ்சையைத் தலைமையிடமாகக் கொண்டு வாரிசு உரிமையில் சோழநாட்டை ஆண்டுவந்தனர் என்றும் முன்னரே பார்த்தோம். இதனால் தனஞ்ஜெயவர்மனின் வழியினர் மூன்றில் இரண்டு பங்கிற்கு மேலாக சோழ நாட்டின்

ஆட்சியாளர்களாகவும், மூன்றில் ஒரு பங்கிற்கு மட்டும் சுந்தர நந்தனின் வழிவந்தோர் ஆட்சியாளர்களாகவும் இருந்துள்ளனர் என்கிற விபரமும் கிடைக்கிறது. சுந்தரநந்தனுக்கும் மகப்பேறு இன்மையால் அப்பகுதிநாடும் நவராமனின் மகன் எரியம்மாவுக்கே ஆட்சிசெய்யக்கிடைத்தது.

ஒற்றியூரில் இருந்த ஸ்ரீகாந்தனின் மகன் எப்படி பழையாறைக்கு வந்தான் ? இவன் ஏன் தாயாதியிடமிருந்தே தஞ்சையைப் பிடித்தான் ? என்பது அடுத்த கேள்விகள். ஒற்றியூர் ஸ்ரீகாந்த சோழனின் காலத்து பாண்டியன் முதல் வரகுணன் என்பவன் ஆவான். சோழநாட்டை நேரடியாக சண்டைபோட்டு வெல்லமுடியாது என்கிற நிலை வரகுணனின் தந்தை ராஜசிம்ம பாண்டியன் காலத்தில் நம் இரண்டாம் பெரும்பிடுகு சுவரன் மாறனால் ஏற்பட்டதால், தேர்ந்த ராஜதந்திரியான முதல் வரகுணபாண்டியன் சோழர்களை உறவுமுறையால் நட்பு அரசர்களாக மாற்றி இருந்தான். அதன் பயனாய் பாண்டியரை வலுப்படுத்திக் கொண்டு சேர, கொங்கு, தகடூர், கங்க நாடுகளை தனதாக்கிக் கொண்டான். அதே நேரத்தில் சோழரும் பல்லவரும் வைத்திருந்த நெருக்கத்தை கெடுத்து ஸ்ரீ காந்தனை பல்லவர் நாட்டின் மீது படையெடுக்கவும் தூண்டி விட்டான். ஸ்ரீ காந்தனின் மூத்த மனைவியின் மகள் அக்கல நிம்மதியை முதல் வரகுணனின் மகன் ஸ்ரீ மாற ஸ்ரீ வல்லபனுக்கு மணம் முடித்திருந்த அதே நிலையில் வரகுணனின் மகள் ஸ்ரீ வல்லம்மாள் என்பவளை இளைய அரசியாக ஸ்ரீ காந்தனுக்கு மணம் முடித்தும் இருந்தான்.

**காஞ்சி மீது படையெடுப்பு :**

ஸ்ரீ காந்தன் கி.பி. 811 வாக்கில் காஞ்சீபுரத்தின் மீது படையெடுத்து அங்கிருந்த தந்திவர்ம பல்லவனை வடக்கே துரத்தி

விட்டான். தோற்றுப்போன தந்திவர்ம பல்லவன் வடக்கே சென்று சிறுபடையைத் தயாரித்துக் கொண்டு அடிக்கடி எதிர்பாராத நேரங்களில் திடீர், திடீர் என்று காஞ்சியைத் தாக்கிய வண்ணம் இருந்தான். இதில் ஒரு போரில் ஸ்ரீ காந்தன் வீரமரணம் அடைந்தான். எனவே அபிநவசித்தி முத்தரையன் என்கிற தாயாதி காஞ்சி நாட்டுக்கும், ஒற்றியூர் நாட்டுக்கும் அரசன் ஆனான், இச்சூழ்நிலையில் ஸ்ரீ வல்லம்மாள் மூன்று மாத கர்ப்பிணியாக இருந்தாள். தன் வயிற்றுவாரிசைக் காப்பாற்ற தஞ்சை முத்தரையச் சோழர் தாயாதியிடம் சரண் அடைந்திருந்தாள். தஞ்சை வல்லத்தில் ஸ்ரீ வல்லம்மாள் பெற்றெடுத்த பிள்ளையே விஜயலாய சோழன் ஆவான். இவனுக்கு பதினேழு வயது ஆகும் போது காஞ்சியில் அபிநவசித்தியையும் தந்திவர்மனும், அவன் மகன் மூன்றாம் நந்திவர்மனும் வென்றுவிட்டனர். அபிநவசித்தி போரில் வீர மரணம் அடைந்தான். காஞ்சி மீண்டும் பல்லவர் வசம் ஆகியது. அபிநவசித்தியின் மகன் சித்தக்குட்டிமாதவன் என்கிற சோழ முத்தரையன் மாங்காட்டுப் பகுதியின் தலைவராக சிலகாலம் இருந்தபின், மதுரை நிலக்கோட்டை சோழவந்தானில் வந்து தங்கி அக்கல நிம்மதியின் உறவின் பலனாக பாண்டியருடன் இணைந்தான்.

அபிநவசித்தியின் மறைவுக்குப் பிறகு ஒற்றியூர் நாட்டின் சிம்மாசனத்திற்கு முறையான வாரிசு விஜயலாயன் என்பதால் விஜயலாயன் ஒற்றியூருக்குச் சென்று முடி சூட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. ஒற்றியூர் சென்றால் விஜயலாயனையும் பல்லவர் கட்டாயம் கொன்றுவிடுவார்கள் என்கிற அரசியல் சூழ்நிலை இருந்ததால் தஞ்சை முத்தரையர் தாயாதிகள் தங்களது சுந்தரநந்தன் தாத்தா வழிவந்த விஜயாலயனுக்கு பழையாறைப் பகுதியில் சிறிதளவு நாடு கொடுத்து அங்கிருந்து முடிசூடிக்

கொள்ளும்படியும், உரிய காலம் வாய்ந்த போது ஒற்றியூர் நாட்டை மீட்டுக் கொள்ளவும் ஏற்பாடு செய்தனர். இந்த விதமாகவே பழையாறைப் பகுதிக்கு அரசனாக விஜயாலயன் வந்தடைந்தான். வந்தநாள் முதல் தனது தந்தை நாட்டை மீட்கும் பேருவகையிலேயே இருந்த விஜயாலயன் ஒருகட்டத்தில் தான் ஒரு பெரிய அரசனாக ஆனால்தான் அது சாத்தியம் என்பதை உணர்ந்து தனக்கு பிறப்பு முதல் உதவிய தாயாதியின் தஞ்சையையே பிடிக்கமுனைந்தான். அவன் எண்ணிய படியே சோழரின் இக்கிளை வலுவடைந்து பல்லவரை நீக்கி காஞ்சியை மீண்டும் 893ல் பிடித்து பேரரசுகண்டனர். முத்தரையர் எனப்பெற்ற சின்ன தாத்தா தனஞ்செயவர்மனின் சகோதர வழிவந்தோரின் நாட்டை நியாய விரோதமாக பிடித்ததற்கு ஈடாக மாமன்னன் ராஜராஜன், ராஜேந்திரன் காலத்தில் கொங்கு நாட்டை அளித்து அரசுபுரிய உதவினர். முத்தரையர் கோனாட்டான், முத்தரசர் என்கிற பெயரில் கொங்கு நாட்டை சோழப் பேரரசு முடியும் வரையில் இருந்து ஆண்டுவந்தனர்.

இந்த கொங்குச் சோழர் வழிவந்த முத்தரச சோழர் முஸ்லீம்கள் காலத்தில் மீண்டும் காஞ்சீபுரம் வந்தனர். இதன் முதல் அரசன் வீர சோழ சம்பமகாராஜா என்பவர் ஆவார். காஞ்சியிலிருந்து சிதம்பரம் வரை முன்னேறி, பின்னர் தஞ்சையிலிருந்து வீரபாண்டியன் என்பவனை விரட்டிவிட்டு கி.பி. 1365 முதல் தஞ்சை உறையூர் பகுதியில் இருந்து சோழநாட்டை விஜய நகரத்தாருக்கு உட்பட்டு அரசுபுரிந்தனர். இவ்வழிவந்த அரசர்கள்பட்டியல் கண்டறியப் பட்டுள்ளது. வீரசேகரன் என்கிற முத்தரையச் சோழனிடமிருந்து விஜயநகரத்து ஆட்சி தஞ்சையைக் கைப்பற்றியது. கிருஷ்ணதேவராயன் காலம் முடிவடையும் வரையிலும் இவர்களின் ஆட்சி சோழ மண்டத்தில் இருந்தது.

கிருஷ்ணதேவராயன் தம்பி ஆட்சியில் சேவப்பநாயக்கர் மூலம் தஞ்சையை விஜயநகரம் கைப்பற்றி சோழர் அல்லாத மரபாரின் மூலம் ஆட்சி செய்ய ஏற்பாடு செய்தது. மதுரையிலும் அவ்வாரே பாண்டியரையும் விஜயநகர அரசு நீக்கி நாகமநாயக்கர் மகன் விசுவநாதநாயக்கரை அமர்த்தியது. சோழநாட்டில் வீரசேகரிடமிருந்து சோழநாட்டு ஆட்சியை கைப்பற்றியது கி.பி. 1535 என்று வரலாற்றாசிரியர் கூறுகின்றனர். ஆனால் 1554 ஆம் வீரசேகரன் என்ற ருத்திரதேவ மகாராஜன்குடந்தை கும்பேஸ்வரர் கோயிலுக்கு இரண்டு கிராமங்களை தானம் வழங்கியுள்ளார் என்று கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. இதன் பிறகு கொள்ளிடத்திற்கு வடபகுதியில் இச்சோழர் குடியினர் தங்கி இருந்து உள்ளனர். அவர்களைக் குறித்த சேவப்ப நாயக்கரின் மகன் கல்வெட்டு ஒன்று காஞ்சிபுரத்தில் குறிப்பிடுகிறது. அதாவது, ஜெயங்கொண்டம் பகுதியில் தங்கியிருந்த இவ்வரசனின் இருக்கை இருந்த ஊரை "**வளையச் சோழன் இருப்பு**" என்று அக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. நாயக்கர் காலம் முதல் இச்சோழர் குடியினர் பின்னடைவில் சிக்கினார்.

இதுவரை பார்த்த நமது ஆய்வின்படி நந்திவர்ம சோழனின் மூன்று பிள்ளைகள் வழிவந்தவரே தமிழகத்திலும், ரே நாட்டிலும், அரசுபுரிந்து வந்த சோழர்கள் என்பதும், அதில் முதல் மகன் வழியினர் இரண்டு அரசர்களோடு குழந்தைப் பேரின்மையால் மறைந்தது என்றும், எஞ்சிய தனஞ்செயவர்மன், சுந்தரநந்தன் வழியினரே தொடரந்து அரசர்களாய் இருந்து வந்தனர் என்றும், இவ்விரு கிளையினரும் தங்களை சோழர் என்றும் முத்தரையர் என்றும் வழங்கிக் கொண்டிருப்பதற்குக் காரணம் இருவரும் ஒரே தந்தை வழிவந்தவர் என்றும் பெறப்படும். அதிலும் தனஞ்செய வர்மன் வழிவந்த குணமுதிதன் என்கிற குவாவன் காலம் தொட்டு

தொடர்ந்து தங்களை முத்தரையர் என்றே வழங்கிக் கொண்டு நாடாண்டுள்ளதும் பெறப்படும். முத்தரச சோழபுரம் என்னும் ஒரு அரசிருக்கை இருந்த பகுதிகளும் இன்றும் வழக்கில் உள்ளதை எட்டுக்குடி பகுதியில் காணலாம். அதேபோல் கீரனூர் பகுதியில் இருந்த கோனாட்டு முத்தரையச் சோழர் கொங்குச் சோழர் என்ற பெயரில் நாடாண்டுள்ளதும் நடைமுறையில் உள்ளது. கொங்கு இலக்கியங்களும் அதை அரண் செய்கின்றன.

எல்லாவற்றிற்கும் மேலாக சோழர்களின் தாயகமாகிய காவிரிபாயும் நாட்டில் தொன்மைக் குடியினராகவும், பேரெண்ணிக்கையிலும் வாழ்ந்து வருபவர்கள் இம்முத்தரையர்களே.

**சான்றுகள் :**

எனவே (1) புண்ணியக்குமரன் செப்புப்பட்டயம் (2) ஸ்ரீ காந்தன் செப்புப்பட்டயம். (3) வேலஞ்சேரி முதல் பராந்தகன் செப்புப்பட்டயம் (4) அன்பில் சுந்தரச் சோழக் செப்புப்பட்டயம் (5) விஜயாலயனின் வாழ்க்கையைக் கூறும் வல்லம் புராணம் ஆகிய சான்றுகளின் அடிப்படையும் முத்தரையர் சோழர் மரபினரே என்று கூற உதவும் ஆவணங்களாக உள்ளன. மேலும் (6) ரே நாட்டு சோழர்களின் வாசகங்களின் செய்திகளைத் தாங்கி புதுக்கோட்டை திருவரங்குளம் செப்பேடு

**"கரிகால் சோழன் குழுவினராகிய சூரிய குல முத்தரையர்"** என்று கட்டியம் கூறி நிற்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும். இவை அனைத்தையும், ஆராய்ந்து முத்தரையர் சோழர் மரபினரே என்று உறுதியோடு கூறுவோம். தொடர்ந்து முத்தரையர் அரசர்களை அரசர் வாரியாகப் பார்ப்போம்.

கி.பி. 75 முதல் 125 வரை ஆட்சி செய்த கரிகால்வளவன் திருப்பதிக்கு வடக்கே கிருஷ்ணாநதிவரை உள்ள தேசத்தை தம் தமிழ்நாட்டு அரசுடன் சேர்த்து அரசுபுரிந்து வந்தான். கரிகாலனின் மக்களில் சிலர் அப்பகுதிகளில் அரச நிர்வாகத்தைப் பார்க்க நிலையாகத் தங்கிவிட்டனர். அவ்வழிவந்த சோழர்களின் கி.பி. 530ல் நந்திவர்ம சோழன் என்பவனே மிகவும் பிரசித்திப் பெற்ற அரசன். நந்திவர்ம சோழன் வழிவந்தோரின் முழுவிபரப் பட்டியல் இந்நூலுடன் இணைக்கப் பட்டுள்ளது.

## நந்திவர்ம சோழன் :

இவன் முதல் நந்திவர்ம பல்லவனின் சம காலத்தவன். இந்த நந்திவர்ம சோழனுக்கு மூன்று பிள்ளைகள் என்று நந்திவர்மனின் கொள்ளுப் பேரன் புண்ணியகுமார முத்துராஜா சோழனின் செப்புப்பட்டயம் கூறுகிறது. (இந்தியக் கல்வெட்டுகள் பதினொன்றாம் தொகுதி நந்திவர்மன் தமிழ்நாட்டை களப்பிரர்களிடமிருந்து மீட்டு பேரரசனாக ஆண்டவன். தனது ரேநாட்டையும், தமிழ்நாட்டையும் தனது மூன்று பிள்ளைகளுக்கும் மூன்று பகுதிகளாக்கி ஆண்டனர். இவன்காலத்தில் களப்பிரர் மதுரையில் மட்டும் இருந்து கடைசி தலைமுறையில் பாண்டிய நாட்டை ஆண்டனர்.

## சிம்மவிஷ்ணு சோழன் : (கி.பி. 530 - 575)

இவன் நந்திவர்ம சோழனின் மூத்த மகன். இவனே கோ செங்கணன் என்பவனும் ஆவான். தோற்ற களப்பிரர் மீண்டும் செங்கணனுடன் சேரன் கணையன் முதலானவர்களுடன் வந்து போரிட்டான். கணையனை கோ செங்கணன் சிறைபிடித்தான். கூட்டுப்படை தோற்று ஓடியது. செங்கணன் களப்பிரர்காலத்தில் தடைப்பட்டிருந்த சிவ, வைணவக் கோயில்களை

பேரெண்ணிக்கையில் கட்ட ஏற்பாடு செய்தான். இவன் கட்டிய கோயில்கள் மாடக்கோயில்கள் எனப்படும். பலவகைப் பட்ட கோயில்களை இவன் கட்டியதாக அப்பர் சுவாமிகள் கூறியுள்ளார். இவன் கோயில்கள் பின்னர் சிவ, வைணவ அடியார்களால் பாடப் பெற்று சிறப்பு பெற்றன. இவன் பிறப்பின் போது இவண் தாய் இறந்து போனாள். அவளின் நினைவாக செங்கணனின் ஆட்சிக்கு உட்பட்ட செம்பிய நாட்டில் உத்தரக் கோசமங்கை கோயிலைக் கட்டியதாக கருதப்படுகிறது. செம்பியன் நாடு என்பதும் இவனது பெயரிலேயே அமைந்தது என்றும் கருதப்படுகிறது. கூன்பாண்டியன் காலம் வரை செம்பிய நாடு சோழர்களின் ஆட்சியில் இருந்து வந்துள்ளது. கி.பி. 2ம் நூற்றாண்டில் தான் அருப்புக்கோட்டைக்கு வடக்கே பாண்டியர் வந்தனர் என்பதால் கோச்செங்கணன் சோழநாட்டின் எல்லையை தெற்கே செம்பிய நாடுவரை கொண்டு வைத்தான் என்று நாம் கூற வேண்டியது கடமை.

**சுந்தரநந்தன் : (கி.பி. 530 - 575)**

இவன் கோசெங்கணனின் நடுதம்பி. இவன் ரே நாட்டின் கீழ்ப்பாதியை ஆண்டுவரலானான். அப்பகுதி கிருஷ்ணா கழிமுகத்திலிருந்து திருவொற்றியூர் வரை நீண்டு கிடந்தது. மேற்கே திருப்பதி மலையை மேற்கு எல்லையாகப் பெற்று இருந்துள்ளது. இவன் வழி வந்தோரின் வம்சபட்டியல் இந்திய கல்வெட்டு தொகுதி 5ல் பக்கம் 123ல் காணலாம். இப்பட்டியலின் கடைசி அரசனாக குறிப்பிடப் பட்டுள்ளவனே ஸ்ரீ காந்தன் என்னும் திருவொற்றியூர் அரசன். கீழைச்சாளுக்கியரின் கீழ் இருந்து பின்னாளிலும், ஆரம்பத்தில் பல்லவரின் கீழ் இருந்தும் இவ்வழியினர் அரசு

புரிந்துள்ளனர். ஸ்ரீ காந்தனின் மகனே விஜயாலயன் என்கிற முத்துராஜா சோழன் ஆவான். இன்றும் திருவொற்றியூர் நாட்டில் முத்துராஜாக்கள் நிரம்பவாழ்ந்து வருகின்றனர்.

**தனஞ்செயவர்மன் : (கி.பி. 530 - 575)**

இவன் கோசெங்கணனின் கடைக்குட்டி தம்பி செங்கணனின் தாய் இறந்து போய்விட்டதால் இளயராணிக்குப் பிறந்தவர்கள் சுந்தரநந்தனும், தனஞ்செயவர்மனும் என்பதே சரி. தனஞ்செயவர்மன் கல்விகேள்விகளில் மிகவும் பிரசித்தமானவன், கலைகளில் வல்லவன். ரே நாட்டின் மேல் பாதியை ஆரம்பத்தில் பல்லவர் கீழும், பின்னர் மேலை சாளுக்கியர் கீழும் இருந்து ஆட்சி செய்தனர், இவன் பிரிவு அரசர்கள். இவனது பெயரன்கள் மூவர். மூவரில் இருவருக்கு தனது அண்ணன் மார்களின் தேசம் மகப்பேறு இன்மையால் கிடைத்தது.

**மகேந்திர விக்கிரம வர்மன் : ( கி.பி. 575 - 610)**

இவன் தனஞ்செயவர்மனின் மகன். நவராமன் என்கிற பெயரும் இவனுக்கு உண்டு. கல்லெழுத்தில் ஆசையுள்ளவன் என்று செப்புப்பட்டயம் கூறுவதால் இவன் அரசியல் நிகழ்ச்சிகளை கல்லில் எழுதி வைக்கும் ஆர்வம் உள்ளவன் என்று தெரிகிறது. இவன் காலத்தில் தான் பல்லவர் ரேனாட்டு சோழர் இரு பிரிவினரையும் வென்று விட்டனர். சோழ நாட்டின் மீது சிம்மவிஷ்ணு பல்லவன் படையெடுத்து வந்தபோது, பல்லவர் படைக்கு உதவியாக இவனும் படையுடன் வந்து தனது பெரியப்பன் நாட்டை பல்லவருக்காக பிடிக்க போரிட்டு இருக்கிறான். இவனும் சிம்மவிஷ்ணு பல்லவனைப் போன்று தமிழ்நாட்டு வெற்றியை தான் பெற்றதாகப் பட்டயத்தில் குறிக்கப் பட்டுள்ளது கொண்டு கூற வேண்டி உள்ளது. உறையூர் முற்றுகையின் போது நல்லடி தன்

தந்தை மீதே படை செலுத்தியதை பார்க்கும் போது இவன் செய்தது ஒன்றும் குறையாகாது என்று கூறலாம். நல்லடியுடன், மகேந்திர விக்கிரமனும் சென்று உள்ளான். எனவே தான் புலவர்கள் தம்மக்களின் மீதே போரிட வேண்டாம் என்று கூறியுள்ளனர். கோசெங்கணனுக்கு கோப்பெருஞ்சோழன் என்னும் பெயர் வழங்கியுள்ளது அறியத்தக்கது.

**குணமுதிதன் : ( கி.பி. 610 - 649)**

இவன் மகேந்திர விக்கிரம வர்மனின் மூத்தமகன். இவனைப்பற்றி ரேநாட்டில் தொடர்ந்து எந்த குறிப்புகளும் இல்லை. இவன் தமிழகத்து அரசியலுக்கு நல்லடிக்குப் பிறகு சோழநாட்டை ஆளும் வாய்ப்பு கிடைக்கப்பெற்றவன். குணமுதிதன் என்றால் குணத்தை விரும்புபவன், அதாவது நல்லவன். நல்லவன் என்னும் பொருள் பொதிந்த குவாவன் என்னும் அபிஷேகப் பெயரைப் பெற்றவன். இவன் மகேந்திர பல்லவனின் சம காலத்தவன், மகேந்திரனைப் போல கலைகளில் வல்லவன். குறிப்பாக இசைக்கலையில் தீவிர ஈடுபாடு உள்ளவன். பரிவாதிநி என்னும் யாழ் இசைப்பதில் வல்லவனாகிய இவன் இசை நுணுக்கங்களை இவன் குடைந்த சிவன் குடைவறைகளில் கல்லில் எழுதிவைத்து புகழ்பெற்றவன். மகேந்திர பல்லவன் எடுப்பித்த குடைவறைகளில் இது போன்ற இசைக்கல்வெட்டுக்கள் இருக்காது. புதுக்கோட்டை மாவட்டத்தில் நான்கு சிவன் குடைவறைகளை இவன் ஏற்படுத்தியுள்ளான். அங்குள்ள இசைக்கல்வெட்டுக்களைக் கொண்டு இவற்றை அடையாளங்கண்டு கொள்ளலாம். திருமெய்யம் வைணவக் குடைவறையும் இவன் ஏற்படுத்தியதே என்று கருதப்படுகிறது. அதே போல் குணசீலம் பெருமாள் குடைவரையும் இவன் பெயர் தாங்கியதே என்று கருதுவதால்

அந்தப் பணியும் அவனுடையதே ஆகும். குணமுதிதன் என்பதையே குணசேனன் என்று கல்வெட்டுகளில் இவன் கூறியுள்ளான் என்பதறியவும்.

குவாவன் முத்தரையரையே புகழ்ச் சோழர் என்று வரலாறு கூறிவருகிறது. அதற்காதாரமாக திருநல்லக்குன்றத்து கட்டுமானக் கோயிலில் புகழ்ச் சோழரின் கரூர் நிகழ்வுகள் ஏழு ஓவியங்களாக வரையப் பெற்றுள்ளன. மிகவும் செதிலம் அடைந்த நிலையில் உள்ள அவ்வோவியங்கள் பெரியபுராண புகழ்ச்சோழர் வர்ணனைகளை எதிரொலிக்கின்றன. திருநல்லக்குன்றம் என்பது திருநல்லவன்குன்றம் என்பதன்திரிபு ஆகும். அங்குள்ள குடைவறை நம்குவாவன் முத்தரையர் என்கிற புகழ்ச்சோழரால் அவர் ஆட்சிகாலத்தின் போது ஏற்படுத்தப்பட்டது. குவாவனின் மகளே மங்கையர்க்கரசியார். குவாவன் முத்தரையரைத் தான் மணிமுடிச்சோழன் என்று அப்பரும், சேக்கிழாரும் கூறியுள்ளனர். தந்தையைப் போல மகளும் 63ல் ஒருவராக பக்தியில் சிறந்து விளங்கியவர். கூன்பாண்டியனை மணந்திருந்த அவர் சைவ மதம் தழுவச் செய்தவர். புகழ்ச்சோழரின் நினைவாக அனேகக்கோயில்கள் தமிழகமெங்கும் காலந்தோறும் எடுப்பிக்கப்பட்டுள்ளது. அண்ணாமலையார், புஷ்பவனேஸ்வரர், பூவாண்டார், தீயாடியப்பர், நல்ல நாயனார், மாசிலிசுவரர், மெய்யநாதர் ஆகிய பெயர்களில் அக்கோயில்கள் உள்ளன. இவர் பெயரில் கோவனூர் (குவாவனூர்) நல்லூர் என்ற ஊரின் பெயர்களும் உள்ளன.

**புண்ணியக் குமாரன் : கி.பி. 615 - 660**

நம்புகழ்ச்சோழரின் தம்பி, இவன் ரே நாட்டின் மேல் பாதி அரசனாக முடி சூட்டிக்கொண்டவன். இவன் வழிவந்த அரசர்களின்

பட்டியல் தொல்லியல் துறையினரால் கல்வெட்டு ஆண்டு அறிக்கையில் வெளியிடப்பட்டுள்ளது. மேலும் இவன் வழிவந்தோர் கிருஷ்ணா ஆற்றுக்கு வடக்கேயும் பெருமளவில் நாடுகளை வென்று ஆட்சிசெய்துள்ளனர். கீழைசாளுக்கிய அரசனின் நாட்டை பிடித்துக்கொண்டு அவர்களை விரட்டிவிட்டனர். அவர்கள் நம் ராஜராஜனிடமே வந்து தஞ்சம் பெற்றது எல்லாம் இவர்கள் படைத்த வரலாறு. பின்னர் ராஜராஜன்தான் வேங்கிநாட்டை மீட்டுக்கொடுத்தான். அக்காலத்தில் காஞ்சிபுரம் முதல் வேங்கிநாடு வரை, மேற்கே ஹைதராபாத்திலிருந்து பெல்லாரி வரை என்று இவர்களின் நாடு ஆந்திர நாட்டில் பெருகிகிடந்தது. இக்காலத்து நமது ராஜராஜன் எழுச்சியால் அவர்கள் அடங்கி போயினர். ராஜராஜன் இல்லையேல் சோழப்பேரரசு ரேனாட்டு பிரிவினரால் ஏற்பட்டிருக்கலாம்.ஜடாச்சோள பீமன் என்கிற புண்ணிய குமாரன் கிளை அரசன் ஒருவன் அத்தகைய மாவீரனாகத் தோன்றியிருந்தான்.

நம்புண்ணியக் குமாரன் வெளியிட்ட செப்புப் பட்டயமே முத்தரையச் சோழர் வரலாற்றில் மிகமுக்கியப் பங்கு வகிக்கும் முதல் பட்டயம் ஆகும். பட்டய விபரம் வருமாறு :



## நல்லடி : (கி.பி. 575 - 610)

புண்ணிய குமாரன் குடும்பத்தில் தனது பிரிவு அரசர்களை மட்டுமே குறித்துள்ளான். மற்ற இரண்டு பிரிவு அரசர்களைக் குறிக்கவில்லை. ஆனால் நமது ஆய்வுமூலம் சிம்ம விஷ்ணு சோழரின் மகன் நல்லடி என்பதை இலக்கிய ஆதாரம் கொண்டு அறியலாம். சிம்ம விஷ்ணுதான் கோசெங்கணன் என்ற உண்மையை உணர்ந்த போது அது சாத்திய மாகிவிடுகிறது. நல்லடிக்கு பீமச்சோழன் என்கிற ஒரு பிரதி பெயரும் இருந்துள்ளது. இவன் சரும நோயால் கஷ்டப்பட்டுள்ளான். இதனால் இவனுக்கு குழந்தைப் பேறும் இல்லை. இவன் குழந்தைப் பேறு வேண்டி தஞ்சை மேல வீதியில் சங்கர நாராயணர் கோயிலைக் கட்டியுள்ளான். அக்கோயில் அப்போதைய பாண்டி நாட்டு சங்கரன் கோயில் புகழ்க்காரணமாக செய்தது. மேலும் இவன் தஞ்சை கரந்தை. சிவன் கோயிலையும் சரும நோய் காரணமாகக் கட்டியுள்ளான். மேலும் திருநல்லம் என்கிற கோயிலையும் இதேக்காரணத்திற்காக இவன் கட்டியதே மூன்று கோயில்களின் தலவரலாறுகள் இவற்றைக் குறிப்பிடுகின்றன. இறுதியில் சிவகங்கை குளத்தில் குளித்துவிட்டு கரையில் படுத்தபோது இவனும் இவனது அரசியும் இறந்து போயினர். அந்த இடத்தில் இன்றும் குளத்தின் ஒரு பகுதியில் சிவலிங்கம் வைத்து வணங்கப்படுகிறது. குளத்தின் கீழ்கரையில் தஞ்சை தளிகுளத்தார் கோயில் இவனுக்காக குவாவன் ஒரு கோயிலை கட்டினான். அக்கோயில் தற்போது மராட்டியர் காலத்தில் வெண்ணாற்றங்கரையில் பெயர்த்து கட்டப்பட்டுள்ளது. ராஜராஜன் பெரிய கோயிலைக் கட்டும் வரையில் இக்கோயிலே சோழர்களின் புனிதக் கோயிலாக கருதப்பட்டது. இது முதல் தஞ்சை நகர் முத்தரையர்களால் சிறந்த நகரமாக உருவாக்கப்பட்டது. வல்லத்துக் கோட்டையைப் போல்

தஞ்சையிலும் மதில் சூழ்ந்த நகரத்தை முத்தரையர்கள் ஏற்படுத்தினர். அந்நகருக்கு குவாவன் தனது பாட்டன் தனஞ்செயவர்மன் பெயரையே வைத்து மகிழ்ந்தான். தனஞ்செயபுரி என்று வழங்கிய அந்நகர் அதே காலம் முதலே தன்செய், தஞ்சை என வழங்கிவந்துள்ளது.

### பெரும்பிடுகு குவாவன் மாறன் : ( கி.பி. 649 - 680)

குவாவன் முத்தரையர் என்கிற புகழ்ச் சோழர் மறைவுக்குப் பிறகு அவர் மகன் குவாவன் மாறன் சோழ அரசரானான். அப்போது பாண்டியன் அரிகேசரி மாறவர்மன் சோழ நாட்டின் மீது படையெடுத்து உறையூரையும், வல்லத்தையும் பிடித்துக் கொண்டான். குவாவன் மாறன் என்கிற நல் உருத்திரன் தனது சகோதரி மங்கையர்க்கரசியை பாண்டியர்க்கு மணம் முடித்து பாண்டியனுடன் சமாதானம் செய்து கொண்டான். மங்கையர்க்கரசி அரிகேசரி மாறவர்மனை ஜைனமதத்திலிருந்து சிவமதத்திற்கு ஞானசம்பந்தர் மூலமாக மதம்மாற்றினார். குவாவன் மாறனின் இறுதி காலத்தில் பெருவளநல்லூர் போர் மூலம் சோழநாடு மீண்டும் பல்லவர் கீழ்வந்தது. சோழநாட்டின் தென்மேற்குப் பகுதிமட்டும் பாண்டியர் வசமே இருந்தது. சோழன்நல்லுருத்திரன் பாண்டியனின் கட்டுப்பாட்டில் இருந்த போது இச்சோழரால் பாடப்பட்டதே முல்லைக் கலி ஆகும்.

### விடேல் விடுகு இளங்கோவதி அரையனாகிய மாறன் பரமேஸ்வரன் (கி.பி. 680 - 705)

இவன் பெயரைக் கொண்டே இவனுக்கு ஒரு மூத்த சகோதரர் இருந்திருக்கலாம் என்று கூற வேண்டும். ஆனால் என்ன காரணத்தினால் மூத்தவன் முடிசூடவில்லை என்று தெரியவில்லை. ஆனால் அந்த மூத்த சகோதரன் வழியில் வந்த ஒருவனே சுவரன்

மாறனுக்குப் பிறகு ஆட்சிக்கட்டிலில் அமர்ந்த சாத்தன் மாறன் என்று யூகிக்கலாம். சோழநாட்டில் நன்னிலம் பக்கம் பரமேஸ்வரமங்கலம் என்று ஒரு ஊர் உள்ளது. அவ்வூர் இவன் பெயரால் அமைந்தது என்று கூறலாம்.

## பெரும்பிடுகு சுவரன் மாறன் : (கி.பி. 705 - 745)

மாறன் பரமேஸ்வரனின் மகனாகிய இவன் மாவீரன். பாண்டிய ராஜ சிம்மனை பல போர்களில் வென்ற சோழன் இவனே. கூன் பாண்டியனிடமிருந்து மீட்கப்படாத எஞ்சிய சோழ நாட்டை மீட்டவனும் இவனே. சோழநாட்டின் தென் எல்லை முழுவதும் கிழக்கே கடற்கரை முதல், மேற்கே புகளூர் வரை 12 போர்களை பாண்டினுடன் நடத்தியுள்ளான். மிகவும் வலுவான பாண்டியரின் படைகளை தோற்கடித்தக் காரணத்தினால் புலவர்கள் வெகுவாகப் புகழ்ந்து சுவரன்மாறனைப் பாடியுள்ளனர். அப்பாடல்களை நியமம் காளிகோயிலில் கற்றூண்களில் மூன்று அடுக்கு களில் எழுதிவைத்து உள்ளான். அவை தற்போது செந்தலை சுந்தரரேஸ்வரர் கோயில் மண்டபத்தில் உள்ளன. அவைகளைத் தொல்லியத் துறையினர் படியெடுத்து. பதிப்பித்து காத்துள்ளனர். அதற்காக தொல்லியல் துறைக்கு மிகவும் கடமைப் பட்டிருக்கிறோம். மேலும்சுவரன் மாறனின் அனேக வழங்கு பெயர்களும் அங்கே பதிப்பில் உள்ளன.

## சுவரன் மாறன் வென்ற போர்களங்கள் :

1. கொடும்பளூர், 2. மணலூர், 3. திங்களூர், 4. அழுந்தியூர், 5. காரையூர், 6. வெண்கோடல், 7. புகழி, 8. கண்ணனூர், 9. காந்தளூர், 10. மறங்கூர், 11. அண்ணல்வாயில், 12. செம்பொன்மாரி ஆகிய இடங்களில் பாண்டியர் சேரர் படையுடன் போரிட்டு வென்றுள்ளான்.

**இவனைப்பாடிய புலவர்களின் பெயர்கள் :**

1. பாச்சில் வேள் நம்பி
2. ஆச்சாரியர் அநிருத்தர்
3. கோட்டாற்று இளம்பெருமானார்
4. கிழார் கூற்றத்து பவதாய மங்கலத்து அமருநிலையாயின குவாவன் காஞ்சன்

மேலும் சுவரன் மாறன் புதுக்கோட்டை மாவட்டம் கிள்ளுக்கோட்டைக்கருகில் தனிஒருவனாக தன்மீது பாய்ந்து தாக்கிய வரிப்புலியை தன் உடைவாளால் குத்தி கொன்று உள்ளான். இந்தச் செய்தியை அங்குள்ள கல்வெட்டு ஒன்று கூறிநிற்கிறது.

பாண்டியருடன் நடந்த போரில் உதவியமைக்காக சுவரன்மாறன் யாதவ வேளிர்களை கொடும்பாளூரில் இருக்க தன்காலம் முதற்கொண்டு அனுமதித்து உள்ளான். இவ்வழிவந்த முதல் யாதவவேள் பாண்டியனின் யானைபடையை வென்றதாகக் கூறிக்கொண்டான். முத்தரையருடன் நல்லுறவில் இருந்த இப்பிரிவினர் தொடர்ந்து முத்தரையர்களுடன் மணவுறவிலும் இருந்துள்ளனர். பாண்டியருடன் சேர்ந்து சுவரன்மாறனை எதிர்த்து போரிட்ட கொடும்பளூர் பழைய தலைவர்கள் எவர் என்று பெயர்கூட தெரியவில்லை. அவர்கள் பாண்டிய நாட்டிற்குள் சென்றுவிட்டனர் என்று கூறலாம். சுவரன் காலம் முதல் கொடும்பளூரில் இருந்த வேளிர்களுக்கும், பாண்டியருக்கு உதவிய வேளிர்கட்கும் எந்த சம்பந்தமும் இல்லை. அவர்கள் வேறு, இவர்கள் வேறு.

**விடேல் விடுகு சாத்தன் மாறன் (கி.பி. 745 - 770)**

சுவரன்மாறனுக்குப் பிறகு சோழநாட்டின் அரசனாகப் பொருப்பேற்ற சோழன் சாத்தன் மாறன் ஆவான். இவனது பெயரைக்கொண்டு சுவரன் மாறனின் சொந்த மகன் இல்லை

என்று உணரமுடிகிறது. சொந்த மகன் என்றால் மாறன் என்கிற சொல் பெயரின் முற்பகுதியாக இருந்திருக்கும். எனவே இவன் சுவீகார மகனாக இருக்க வேண்டும். சாத்தன்மாறன் திருமெய்யம் குடைவறைக் கோயிலை புதுப்பிக்கும் பணியினை செய்துள்ளான். இவன் தாய் பெரும்பிடுகு பெருந்தேவி அண்டக்குடி என்ற ஊரினை இக்கோயிலுக்கு தானம் வழங்கியுள்ளாள். சுவரன்மாறன் காலம் முதல் கோனாடு முழுவதும் சாத்தன்மாறன் சோழனிடமே இருந்துள்ளது என்பதை இக்கல்வெட்டு கூறிநிற்கிறது. மேலும் ஏரிக்கு கலிங்குகட்டிய செய்தியை ஒரு கல்வெட்டு தெரிவிக்கிறது. முத்தரையர்களின் நீர்ப்பாசன பணிகளை அது தெரிவிக்கிறது.

## பெரும்பிடுகு இரண்டாம் குவாவன் (கி.பி. 770 - 791)

இவன் வெளியிட்ட கல்வெட்டு ஒன்று பொன்விளைந்தான் பட்டியில் கிடைத்துள்ளது. இவன் மனைவியின் பெயர் மாந்தூர்த்தடிகள். இவள் பெயரைக் கொண்டு இவள் ஜைனமத ஈடுபாடு உள்ளவள் என்று தெரிகிறது.அதற்கேற்றார்போல் இக்கல்வெட்டில் திருக்காட்டுப்பள்ளியில் இருந்த ஜைனப் பள்ளிக்கு தானம் கொடுத்ததையே குறிப்பிடப்படுகிறது. எனவே முன் சொன்னக் கருத்து உறுதிப்படுகிறது. மாமண்டூர் ஜைனபள்ளியில் கல்விபயின்ற பல்லவ அரசி ரேவாவின் மகளாக இவள் இருக்கலாம். இரண்டாம் குவாவன் சிறந்த சிவபக்தன். ஆனால் இவனது இளைய அரசியாகிய மாந்தூர் தடிகள் தீவிர ஜைன ஈடுபாடு உள்ளவள். குவாவானின் பிற்காலத்தில் சோழநாடு – மேற்கூறு சோழநாடு, கீழ்க் கூறுசோழநாடு என இரு பிரிவுகளாக்கப் பட்டு இளைய ராணி மாந்தூர் தடிகள் மகன் குவாவன் எட்டி கீழ்க்கூறு சோழநாட்டிற்கு அரசனாகவும், மூத்த அரசி மகன் குவாவன் சாத்தன் மேற்கூறு சோழநாட்டிற்கும் அரசர்களாக ஆயினர்.

குவாவன் எட்டியின் இருக்கை வடவல்லம் என்கிற முத்தரச சோழபுரம் என்னும் இடத்தில் இருந்துள்ளது. இது எட்டிக்குடிக்கு அருகில் உள்ளது. தூர்ந்து போன அகழிகள், தகர்ந்து வீழ்ந்த மதில்கள் ஆகியவைகளை முத்தரச சோழபுரத்தில் இன்றும் காணலாம். இவ்வூரைக்குறித்து திருக்குவனை தியாகராஜபெருமாள் கோயிலில் உள்ள கல்வெட்டு ஒன்று கீழ்வருமாறு பேசுகிறது.

**இளங்குடி இருக்கை வடவல்லம் என்கிற இந்திரபதி நல்லூர்.**

என்பதே அக்கல்வெட்டின் வாசகம். இதனைக் கொண்டு குவாவனின் இளயக்குடி வழியினர் இங்கு இருக்கைக் கொண்டு சோழநாட்டின் கிழ்பகுதியை அரசுபுரிந்தனர் என்று நாம் அறியலாம். இவ்வழியினரின் கீழ்ச் சோழநாட்டில் பல முருகன் கோயில்களை எடுப்பித்தது அவர்களின் ஜைன தாயின் ஈடுபாடே ஆகும்.

மேலும் இந்தப் பிரிவு சோழ நாட்டில் இரண்டாம் புலிக்காடு என்றும், எட்டிபுலிக்காடு என்றும், கழுகப்புலிக்காடு என்றும் ஊரின் பெயர்கள் ஜைனமதத் தன்மையையும், இரண்டாவது இளையகுடியினர் என்பதையும் குறிப்பிட்டு நிற்பதையும் காணலாம்.

குவாவன் எட்டிக்கு, எட்டிச்சாத்தன், எட்டிக்குவாவன், எட்டிக்கடம்பன் என்ற மூன்று மகன்கள். கீழச்சோழ நாட்டை மூன்று பகுதிகளாக்கி அவைகளின் ஆளுநர்களாக அவர்களை ஆக்கினான் எட்டி அரசன்.

மூத்தவன் எட்டி சாத்தனுக்கு வலங்கைமான், ஆலங்குடிப் பகுதியைத் தலைமையிடமாகவும், இரண்டாவது மகனாகிய எட்டி குவாவனுக்கு புதுக்கோட்டை கலசபுரத்தைத் தலைமையிடமாகவும்,

மூன்றாவது மகனாகிய எட்டிக்கடம்பனுக்கு எட்டிக்குடி வல்லத்துக் கோட்டையை தலைமையிடமாகவும் ஆக்கிக் கொண்டனர். எட்டிச்சாத்தன் பின்னர் அரசியல் சூழ்நிலைக் காரணமாக தெற்கே சாத்தூர் பகுதியில் சென்று தங்கி பாண்டியருடன் இணைந்து தஞ்சையைப் பிடித்த விஜயாலயன் மீது போர் நடத்த தலைமையேற்று வந்துள்ளான்.

## விடேல்விடுகு குவாவன் சாத்தன் (கி.பி. 791 - 832)

மேற்குபகுதி சோழநாட்டு அரசனாக தந்திவர்மபல்லவன் காலத்தில் இருந்தவன். இவனது படைப்புகளான குன்றாண்டார்கோவில் குடைவரைக் கோயிலும், திருவாலத்தூர் அப்பர் பெருமான் குடைவரை, திருமால் குடைவரை ஆகியவைகளை ஏற்படுத்தியவன். இவன்காலத்து பிற்பகுதி கி.பி. 811 முதல் சுயாட்சியுடன் ஆட்சி செய்தவன். இக்காலத்தில் ஏற்பட்டவைகளே திருவெள்ளறை திருமால், சிவன் குடைவரைகள், ஸ்வத்திகக்கிணறு முதலானவைகள் பாண்டியன் முதல் வரகுணன் இவனுடன் நல்லுறவில் இருந்தான். இவன் மகன்கள் சாத்தன்பழியிலி, சாத்தன்பூதி என்கிற இருவரும், சாத்தன்காளி என்கிற மகளும் இருந்தனர்.

## பெரும்பிடுகு சாத்தன் பழியிலி (கி.பி. 832 + 55 = 887)

சாத்தன் பழியிலி தஞ்சையிலிருந்து அரசுபுரியவில்லை. தஞ்சையின் தலைமை ஆட்சி இவன் தம்பி சாத்தன்பூதி இளங்கோ முத்தரையன் ஏற்றிருந்தால் இவன் வேறு இடத்தில் இருந்துள்ளான். இவன் நிருபதுங்க பல்லவன் காலத்திலும் இருந்துள்ளதால் 55 ஆண்டுகளுக்கு மேல் பதவியில் இருந்திருக்க வேண்டும். இவன் குடைவித்த பழியிலீச்சுவரம் என்னும் நார்த்தாமலை

குடைவரை நிருபதுங்க பல்லவன் காலத்தது. நிருபதுங்களின் ஏழாம் ஆட்சியாண்டில் குடைவிக்கப்பட்டதென ஆய்வேடு கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது. அக்கல்வெட்டில் விடேல்விடுகு முத்தரையன் மகன் என்று குறிக்கப்பட்டிருப்பதாலும், இவனது இளய சகோதரனை விடேல் விடுகு இளங்கோவதி அரையன் என்று கல்வெட்டுக்கள் குறிப்பதாலும் சாத்தன்பழியிலியின் பட்டப்பெயர் பெரும்பிடுகு என்றே இருந்திருக்க வேண்டும் என்பதோடு விடேல் விடுகு, பெரும்பிடுகு பெயரை மாறி, மாறி முத்தரைய அரசர்கள் வழங்கிக் கொண்டுள்ளனர் என்பதும் தெளிவாகிறது. இவன் காலத்து கொடும்பாளூர் வேள் நிருப கேசரி என்பவன் நிருப துங்கனுடன் இளம்வயதில் காஞ்சியில் வளர்ந்தவன் நிருப கேசரி. நிருப துங்கனின் ஏழாவது ஆண்டில் பழியிலிஈஸ்வரமும் ஏற்படுத்தப்பட்டுள்ளதால் இம்மூவரும் ஒரு சேர்ந்த காலத்தில் பாதி வாழ்க்கைக் காலத்தையாவது பெற்றிருந்திருக்க வேண்டும்.

## விடேல்விடுகு சாத்தன்பூதி (கி.பி. 832 + 60 = 892)

சோழநாட்டை கோசெங்கணனுக்குப் பிறகு சுதந்திரமாக ஆண்டவர்களின் இவன் தந்தை குவாவன் சாத்தனும், இந்த சாத்தன் பூதியுமே ஆவர். இதே நேரத்தில் கீழ்ச் சோழநாடும் இவன் தாயாதிகளால் ஆளப்பெற்றது. இதற்கு வித்திட்டவன் ஒற்றியூர் சோழன் ஸ்ரீகாந்தனே ஆவான். எனவே அவன் மகள் விஜயாலயனை பழையாறையில் இருப்பிக்கச் செய்தவனும் இந்த சாத்தன்பூதி என்கிற இளங்கோ முத்தரையனே ஆகும். இவனை "உத்தமதானி" என்று கல்வெட்டுக்கள் அழைக்கின்றன. கும்பகோணத்திற்கு அருகில் உள்ள உத்தமதானபுரம் இவன் பெயரால் அமைந்தது. இவன் கல்வெட்டுக்கள் புதுக்கோட்டை

